[11th August 1960

பயிற்சி மற்றென்று. கூட்டுறவுக்கு அதில் பயிற்சி பெற்ற நிர்வாகஸ்தர்களையும், விவசாயத்திற்கு அதற்கு ஏற்ற டெக்னிகல் பர்சனல்களையும் நியமிக்கிறோம்.

SRI M. D. THIAGARAJA PILLAI : தலைவர் அவர்களே, கூட்டுறவு பண்ணைகளை அபிவிருத்தி செய்ய, சீனியர் இன்ஸ்பெக்டர்களையும், பீல்ட்மென்களையும் ஏற்பாடு செய்திருக்கிறார்கள். ஆனால், அநேக சங்கங்களுக்கு, அந்த உத்தியோகஸ்தர்கள் உதவி கிடைப்பதில் தாமதம் ஏற்படுகிறது. ஆகவே, சீக்கிரமாகவே நியமனம் செய்ய அரசாங்கம் நடவடிக்கை எடுக்குமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : போதுமான பீல்ட் ஆபிசர்கள், அக்ரிகல்சர் பீல்ட் ஆபிசர்கள் கிடைக்காததுதான் அதற்குக் காரணம்.

SRI S. M. ANNAMALAI : சீனியர் இன்ஸ்பெக்டர்கள் நியமிக்கும் போது, விவசாயக் குடும்பத்தைச் சேர்ந்தவர்களுக்குத் தனிச் சலுகை அளிக்க அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : சீனியர் இன்ஸ்பெக்டர்கள் எந்த குடும்பத்தைச் சேர்ந்தவர் என்று பார்ப்பதற்கில்லை ; சீனியர் இன்ஸ்பெக்டர்களைத்தான் போட முடியும்.

SRI A. GOVINDASAMY : இதுவரை கூட்டுறவுப் பண்ணைகளில் ஏற்பட்ட அனுபவத்தை ஒட்டி, அதைத் திருத்தியமைக்க அரசாங்கத்திற்கு, புதிய நடவடிக்கை எடுக்க, உத்தேசம் உண்டா ?

THE HON. SRI R. VENKATARAMAN : ஒன்றும் இல்லை.

SRI M. K. SOMASUNDARAM : சார், விவசாயத்திற்குக் கடனே, உரங்களோ வழங்கும்போது, பயிரிடும் காலங்களை ஒட்டி, தக்க சமயத்தில் வழங்க அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : It is a separate subject, Sir,

*Land acquisition.*

*111 *Q.*—SRI S. M. ANNAMALAI: கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

வட ஆற்காடு மாவட்டம் ஆரணி தாலுகாவில் எத்தனை பட்டாதாரர்களின் நிலங்கள் நீர்ப் பிடிப்பு என்று சர்க்காரால் எடுத்துக்கொள்ளப்பட்டன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : The total number is 2,072.

SRI S. M. ANNAMALAI : எவ்வளவு ஏக்கர் நிலங்கள் சர்க்காரால் எடுத்துக்கொள்ளப்பட்டன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : 1,765 ஏக்கர்கள்.

11th August 1960]

**SRI S. M. ANNAMALAI** : *ஸார், இப்படி சிறு நிலச் சுவாந்தார்கள், 4 எக்கர், 3 எக்கர் வைத்திருப்பவர்களை, எரித்தண்ணீர் பிடிப்பு என்று, கிணறுகளை மட்டும் விட்டு விட்டு, சர்க்கார் எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். 4, 3 எக்கர்கள் வைத்து இருப்பவர்கள், கிணற்றை மட்டும் வைத்துக்கொண்டு விவசாயம் செய்ய முடியாது. ஆகவே, அதை மறு பரிசீலனை செய்து, நிலங்களை அவர்களுக்கே ஜாரி பண்ணிக் கொடுக்க சர்க்கார் முன் வருவார்களா ?*

**THE HON. SRI M. A. MANICKAVELU** : *இந்தச் சூழ் நிலை என் எற்பட்டது என்றால், ஜாகிர்தார் தன் இஷ்டம் போல் அஸைன் பண்ணி விட்டார்; செட்டில்மெண்ட் செய்யும் போது, தவறாகச் செய்திருப்பது தெரிகிறது. டாங்க் பெட்டில் பயிர் செய்வதானால், எரி தூர்ந்து போய்விடும். இம்மாதிரிப் பயிர் செய்யக் கூடாது என்று தடுக்க வேண்டியிருக்கிறது. ஆனாலும், இம் மாதிரி நிலம் இழந்தவர்களுக்கு, சர்க்கார் நிலத்தைப் பங்கீடு செய்யும் போது, அவர்களுக்கு, ப்ரிபரென்ஸ், முதல் படியாகக் கொடுக்க எற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அந்த முறையிலே, அவர்களுக்கு நிலம் கிடைக்கும்.*

**SRI A. GOVINDASAMY** : *பாதிக்கப்பட்டவர்களுக்கு நஷ்ட ஈடு கொடுக்கப்பட்டதா ?*

**THE HON. SRI M. A. MANICKAVELU** : *நஷ்ட ஈடு கொடுக்க முடியாது. இது துராக்ருதமாக, ஜாகிர்தாரோ, ஜமீந்தாரோ, செய்ததை நம்பி வாங்கி விட்டார்கள்; அப்படி வாங்கியிருக்கக் கூடாது. சட்டப் பிரகாரம் நஷ்ட ஈடு கொடுக்க முடியாது.*

*Tax exemptions to motor vehicles owned by local bodies*

* 112 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : Will the Hon. the Minister for Electricity be pleased to state—

(*a*) whether tax exemptions are granted to motor vehicles owned by municipalities and panchayats;

(*b*) if so, from which year; and

(*c*) on what basis?

THE HON. SRI V. RAMAIAH : (*a*) & (*b*) Road-rollers and tractor graders belonging to local bodies are exempt from payment of tax from 1934 and 1941 respectively. Other motor vehicles owned by local bodies have to pay tax.

(*c*) It is considered that the machinery used for maintaining the roads should not be taxed.

**SRI V. K. KOTHANDARAMAN** : *ஸார், ஸ்தல ஸ்தாபனங்களிலே, நகர அபிவிருத்தி, சுகாதாரம் போன்ற பொதுக் காரியங்களுக்கு உபயோகிக்கும் எல்லா மோட்டார் வாகனங்களையும், வரி விதிப்பிலிருந்து விலக்களிக்க, இனிமேலாவது திட்டமிட உத்தேசமுண்டா ?*